| காதல் நிலவே | |
|---|---|
| 1 | அன்று வந்ததும் அதே நிலா |
| 2 | ஜனாதிபதி தேர்தல் |
| 3 | கண்ணே கலைமானே |
| 4 | காதல் நிலவே |
| 5 | நளாயினி |
| 6 | விண்ணைத் தாண்டி வந்த வெண்ணிலவு |
| 7 | யுத்த பூமி |

# அன்று வந்ததும் அதே நிலா

---

நிலவின் அமுத ஒளியில் இரவு மலர-குளத்தில்
நீரல்லிகள் பூத்துக் குலுங்க-கருவானில்
அன்ன நடை போட்டு உலாவரும் வெண்மேகங்கள்
கண் விழித்துக் கதைபேசும் விண்மீன்கள்






வானுயர்ந்த சோலைக்குள் வாழும்
வறுமைக் குடில்கள், களிமண் சுவரும்
ஓலைக் கூரையுமாய் ஏழை விவசாயிகளின்
இல்லிடங்கள், மனதிலே ஆனந்த நிலைகள்

பூத்த விளக்கொளியில் கோலமயிலாய் அவள்
வாசலில் நின்றிருந்த கோலத்தை இரசித்த காளை
கண்களால் கதைபேசி, இதயங்கள் இடம்மாற
காதலான ஏழைகளின் உறவு

தோகையின் சாயல், பூந்தளிர் மேனி
கார்குழல், முத்துக்கள் சிந்தும் புன்னகை,
பங்கய முகம், அங்கமெல்லாம் தங்கமாய்
ஜொலிக்க, தந்தத்தில் வடித்த சிற்பம்

கண்களால் கதைபேசி, வெண்ணிலவில்
தேன் நிலவைக் கொண்டாட பெரியோரின்
பெருமான் புத்தரின் ஆசிரை வேண்டி, மழையும்
மண்ணுமாய் கலந்த காதல் நெஞ்சங்கள்





நிலவொளியில் நங்கை எழில் ஒளிர-பூவிழிகளில்
பூத்த கண்ணீர் பனித்துளிகளாய் மின்ன
நெஞ்சுக்குள் நிலைத்த சோகம், என் அழகை
இரசிக்க, காதலன் இல்லை என்ற பாவம்

எதிர் வீட்டுக் குடிசைக்குள் மங்கலான ஒளி
குப்பி விளக்கில் புத்த பெருமானைத் தொழும் அன்னை
பூத்த புதல்வனை யுத்தம் பலி கொண்ட அவலம்
தாயோ யாருமற்ற அநாதையான துயரம்

அன்று, கண்பார்த்து காதலை நெஞ்செழுத
நிலவொளில் தோகை விரித்தாடிய காதல் பாவை -இன்று
தனிமையில் விண் ஊரும் நிலா பார்த்து நெஞ்சம் விம்ம
தேய்பிறை நிலவாய்த் தோகை

யுத்தத்தின் சத்தங்கள் ஓயவில்லை,-சிந்திய
இரத்தங்கள் காயவில்லை, கண்ணீர் நிற்கவில்லை
அழுகையும், புலம்பலும் ஒலிக்காத வீடில்லை
ஆயுதவாதமே ஆளும் வேதம் என்ற அவல நிலை



அன்று வந்த நிலவில், அவள் மடியில் அவன்
அவன் மனதில் காதலாகிப் பூத்த வண்ணப் பூச்சரம்
மலரும், மணமும் பரப்பி, உறவுகள் மலர
ஏழை நெஞ்சங்களில் ஒலித்த காதற்பாசுரம்



குப்பி விளக்கில் குடில்கள் ஒளிர, முற்றத்தில்
கூடி வந்து சொந்தங்கள் கதை பேசி மகிழ
வறுமை இருளுக்குள் ஒளிர்ந்த இன்பமான இரவு,
இன்றோ வாழ்வே மாயம் என்றான துன்பப் பொழுது

பொத்! பொத்!என தவளைகள் குதிக்க,
சட! சடவென இறக்கை அடித்து கூகை பறக்க
சலசலத்த புதர்கள், சத்தமின்றி
வெட்டிச் சாய்த்த ஏழைகளின் உடல்கள்



கிழக்கின் எல்லையில் அமைந்த -சிங்களக்
கிராமத்தை தாக்கிய பயங்கரவாத வன்முறை
அப்பாவித் தமிழர்களை கொன்று குவித்ததிற்குப்
பழிக்குப் பழி என்றான துரதிஷ்ட நிலை

இனவாத யுத்தம் இரு தரப்பையும் எரிக்க
கருகிய சொந்தங்கள், காணாமற்போன பந்தங்கள்
மடியில் தலை சாய்த்த உறவு-விடியலில்
மண்ணுக்குள் தலை சாய்த்த அவல நிகழ்வு



விடியலில் அழகும் குலைய, நிலவும் வெளிறி மறைய,
வாழ்வும், சாவும் ஒரு தொழுதாக-புன்னகை
மறைந்து கண்ணீர் நிலைக்க-மாலை சூடி
புகைப்படமான உறவு, வாழ்வோ மாயக் கனவு

கண் பார்த்து நெஞ்செழுத-பூவாய் நெஞ்சில்
பூத்த காதல் உறவு, வாழும் காலமெல்லாம்
நெஞ்சில் சோகம் நிலைத்திட-யுத்தமோ
மனிதத்தை அழிக்கும் பயங்கரவாதமான நிகழ்வு





இன்று கன்னி வானில் நிலவில்லை, கனவான வாழ்வில்
எதுவும் நிலையில்லை, புள்ளினம் பூபாளம் பாடப்
பூ மலரும் காலைப் பொழுதான வாழ்வு மலர,
அவள் கதிரவன் மண்ணிற்குள் அஸ்தமித்த இரவு

நிலவு வரும் பொழுதெல்லாம்
நெஞ்சுக்குள் உலவும் உனதன் நினைவு
பூவிழிகளில் நீர் தேங்கிட-பூத்த
வண்ணக் கனவோ கலைந்த நிகழ்வு

மயிலைக் காளையில் மன்மதன் உன் சாயல்
வீசு தென்றலில் உன் மென்மையான தழுவல்
மண் வாசனையில் உன் நேசம், மல்லிகையாய்
உன்னைச் சூடிய மனதில் புத்த பெருமான் வாசம்

வெறுமைக்குள் கன்னி மனம், சீவர ஆடைக்குள்
அமைதியின் ஆனந்தம், புத்த பெருமானைச்
சரணடைந்து புதுப்பிறப்பான வாழ்வு, நிர்வாணமே
மனிதர் நாம் அடையும் நற்பேறு

பகைமையைப் பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினால் தணியுங்கள்
என்றுமுள்ள தர்மம் இதுவே
புத்த பெருமானின் மாறாத போதனை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-3-8-2024*

# ஜனாதிபதி தேர்தல் 2024





ஈழமெங்கும் சூடுபிடிக்கும் ஜனாதிபதி தேர்தல் பிரச்சாரம்,
மேடைகளில் திருடர்கள் ஓதும் ஆரவாரத் திருவாசகம்
மூவினத்தையும் பிரித்தாண்ட சூது, இன்றோ
நாம் அனைவரும் ஒரு தாய் மக்கள் என்ற வாது

ஒற்றுமை, அபிவிருத்தியோ பாடும் பாசுரம்
அதலபாதாளத்தில் தேசப் பொருளாதாரம்,
திறைசேரியைக் கொள்ளையிட்ட திருடர்கள்
நிறம் மாறும் ஓணான்களாய் அரசியல்வாதிகள்

வடக்கிலும், கிழக்கிலும் அபிவிருத்திக் கோஷம்
அதிகாரப் பகிர்வோ சாரமற்ற உப்பான தோஷம்
இணக்க அரசியல் பேசும் இயக்கத் தலைவர்கள்
தமிழர் போராட்டத்தை காட்டிக் கொடுத்த எட்டப்பர்கள்

மாயப் பொன்மானாய்த் தமிழ் தேசியம்-தேர்தல்
காலத்தே வாக்குச் சீதையை கடத்திச் செல்ல, இராவணன்,
மாரீசன்களாய் தமிழ் அரசியல்வாதிகளின் வேசித்தனம்,
பல்லாண்டுகளாய் ஏமாறும் தமிழ் இனத்தின் மூடத்தனம்

திருடனுக்கு மணிமுடி சூட பிரித் ஓலிகள்
தேவாரங்கள், பாசுரங்கள், வாக்கு வங்கியை
வியாபாரமாக்கி, அரியணை அமர, வறுமையை
விலைபேசும் அரசியல் வேசித்தனங்கள்

ஆழ்வார்கள், நாயன்மார்கள், சங்கராச்சாரிகள்
பீடாதிபதிகள் பாதம் தொட்டு ஆசி கேட்கும் வேசி மக்கள்
மந்திகளாய் கட்சி தாவும் விபச்சார அரசியல்வாதிகள்
மலிந்த, இழிந்த விபச்சாரமாய் ஈழ அரசியல்

இனவாதக் கொள்கை ஈழத்தை ஆள-தேசத்தின்
கருவூலத்தை கொள்ளையிட்ட குடும்ப ஆட்சி
மக்கள் விரட்டிட, கொள்ளையர் தெரிந்த ஜனாதிபதி
திருடர் கூட்டத்தைக் காத்த சாணக்கியனாய் அதிபதி

இனவாதக் கொள்ளையர்ஆட்சியால்-மாயமான
தேசத்தின் கருவூலம், வறுமை தலைவிரித்தாட,
மக்கள் தெருவில் இறங்கிப்போராட, கண் மறைந்த
ஜனாதிபதி, கலகம் பிறக்க நீதி பிறக்காத அநியாயம்

POLITICS IS TOO SERIOUS A MATTER TO BE LEFT TO THE POLITICIANS “(Charles de Gaulle)

“That government is best which governs least.”

“The people cannot delegate to government the power to do anything which would be unlawful for them to do themselves.”

“Power tends to corrupt, and absolute power corrupts absolutely.”

“Violence is the last resort of the incompetent.”

இனவாதம், மதவாதம் தீ மூட்ட,
மடியாத பிரிவினை வாதம், மடிந்த பல இலட்சம்
மக்களோ கணக்கில் அடங்காத அதர்மம்
காணாமல் ஆக்கப்பட்டோருக்கு எங்கே தர்மம்?

நீதி நிலைத்து நல்லாட்சி அமைய, ஊழல் ஒழிந்து,
நீதித்துறை சுயாதீனமாய் செயற்பட, அரசியல்வாதிகளின்
ஆடம்பரச் செலவுகள், குடும்ப ஆதிக்கம்,
செல்வாக்கு ஒழிய புதிய தலைமைத்துவம் தேவை,

இன ஒற்றுமை நிலைக்க, எல்லோரும்
ஒரு தாய் மக்கள் என ஒற்றுமையுடன் வாழ
வறுமை ஒழித்து நாடு முன்னேற
நல்லாட்சி அமைக்க வாரீர் தோழர்களே!

அமுதின் சுவையைப் பரிமாறும் அகப்பை அறியாது,
ஞானத்தின் சுவையை மூடன்-ஞானிக்கு
சீடனானலும் தவமின்றிப் பெறமுடியாது

"THE SPOON WILL NEVER SENSE THE TASTE OF THE MEAL, THUS THE IGNORANT ONE WILL NEVER ABSORB FACTS EVEN IF HE ASSOCIATES THE INTELLECTUAL ONES".

*(Lord Buddha)*

SLPP candidate Gotabaya Rajapaksa won the election in a landslide victory' But Prof. Ratnajeewan Hoole, who was one of the members for election monitoring claimed to have said that we are like Emperor without clothes. Also he said the Election Results were suspiciously rigged, when two unknown persons attended the computerized counting.

ONE OF THEM WAS Mr BASIL

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-8-2024

THIRTEEN FUNDAMENTALS TO BE FULFILLED BY THE PRESIDENTIAL CANDIDATES

Whoever promises should be able to prove it by actions the following 13 fundamentals would most likely win the confidence of the majority in the upcoming election.

1. Avert and pre-empty corruption and expose corrupt politicians including state officers.

2. Concede freedom of actions to the judiciary, police, Election Commission and other commissions and refrain from political interference.

3. Take steps to prevent and reoccurrence of the state wastefulness. The Presidential candidates could promise to follow in the footsteps of Mao Zedong (China) and Angela Merkel (Germany) in this regard. Meanwhile, the prime minister of Great Britain travels by train, the Sri Lankan parliamentarians travel by ultra-luxury vehicles like V8, Benz and BMW at the expenses of destitute tax payers. The parliamentary members can use inexpensive Indian, Malaysian or Japanese vehicles. If they want to use luxury vehicles, they can do so from their own money. The former President Maithripala Sirisena travelled overseas 33 times with his siblings, friends and henchmen at the expense of taxpayers during his tenure and the writer has serious doubt whether he has been able to bring back 33 cents worth of benefits to our country. Which candidate takes precautionary measures to stop/ prevent state wastefulness?

4. Designate subject experts with proven track records to Government positions of superior status substituting friends and political henchmen.

5. Abstain from giving nominations to anyone with allegations of corruption, murder, bribery, rape, waste and already convicted criminals. The party nominations to be given to those who possess a Degree/ Diploma / national level achievement or at least with moral turpitude.

6. Abolish powers to select and award tenders from ministers, deputy ministers and state ministers including secretaries of ministries. Recommend appointing seven-member honorable, subject experts from outside the ministry to handle the complete tender procedure. Ensure transparency and the right to information without delay to citizens.

7. The national security policy to be integrated into the National Economy, National Culture, National Diplomacy, National Science and Technology, National Intelligence and Innovation and finally National Political Capability. The national security policy should ensure the territorial integrity and sovereignty of the country. It should suit and assist the interest of the citizens and the Government's overall strategy for development. Safeguarding Unity and opposing split is of greater importance. National unity is the theme to ensure national security. It is confirmed by the old wise saying "United we stand, divided we fall". The National identity of all the citizens to be "SRI LANKAN". Which candidate can assure National security based on these principles?

8. Preclude by law the division of citizens by ethnicity, language and religion to obtain political benefits.

9. Crystalline transparency and bribe-free environment to Foreign Direct Investors and local investors. They must be allowed to express their views/ opinions to the world.

10. The mandatory retirement age for politicians to be made 75 years. Age can have an impact on work performance. Older workers may experience natural age-related decline that can impede their performance. Sleep and cognitive function, which both decline with age, can also affect work performance in older workers. Nimal Siripala De Silva is a living example in the Sri Lanka parliament.You can observe him sleeping almost all the time in the parliament. By age 75, the percentage of body fat typically doubles compared with what it was during young adulthood. Too much body fat can increase the risk of health problems, such as diabetes. Politicians over 75 years to undergo mental competency tests. Politicians themselves decide their service conditions. They don't want to lose their powers. They want to enjoy the benefits life time or till they want to enjoy them at the expense of tax payers and citizens. Therefore, laws must be enacted that the mandatory retirement age for politicians to be 75 years.

11. Rajapaksa and his family were the subjects of numerous state resource abuse complaints from organisations and election monitors, including claims of their involvement in fraud, misuse of powers, murder, and money-laundering activities said to have taken a couple of $ billions. On 7 May 2015, Foreign Minister Mangala Samaraweera received intelligence reports from four foreign nations that involved tracing billions of dollars stashed abroad, stating that the Rajapaksa family holds $18 billion worth of assets in foreign countries. Which presidential candidate can sincerely assure people of Sri Lanka that stolen money will be recovered despite relationships, political affiliations and positions of any politician or state officer?

12. Hospital policies prohibit sharing a hospital bed due to safety, space, and infection control concerns. Hospital beds are designed for single occupancy to ensure the patient's rest and proper medical care. The writer's sister was admitted to Ragama General Hospital where she had to share a mini bed with another patient for seven days. The situation in other wards was the same. Nonavailability of basic drugs for patients was another serious matter and most of the patients take medicine once in three days. Which candidate can assure solutions to the burning health issues including one patient and one bed?

13. Which contender can truthfully enssure punishment to those accused in the Easter Sunday carnage and relief to victims? To my understanding, there are many accused who are directly and indirectly responsible and are affiliated with all the main political parties. The above 13 fundamentals are more important than 13th amendments to the citizens.

Manifestation of broken promises and public trust

Promising rice from the moon was the nadir of election promises in this country. That clearly over-the-top election pledge made in 1970 to woo voters has yet to be matched. The first Executive President of Sri Lanka JR Jayewardene made a broken promise. The abolition of the executive presidency was the common broken promise made by all the leaders of the country. A recent survey conducted by the Centre for Policy Alternatives (CPA) has unearthed that public trust in Parliament and political parties has reached an all-time low, with parliament showing 22 percent public trust and political parties showing 19 percent trust. The trust placed in Presidents is no different and Gotabaya Rajapaksa was a classic example.

It is a proven fact that the citizens of the country have not placed trust in politicians. The regaining trust is a mammoth task for all the candidates as of today the citizens are faced with severe economic hardships and finding it difficult to survive. The parents, youth, state and public sector including entrepreneurs, investors, intellectuals, farmer and fishing communities and in general all the citizens except very few have either lost or have no hope for their future. It can be justified by studying how many youths have left the country for the last four years including intellectuals.

Who can win public confidence?

Whoever can sincerely promise and implement the above 13 fundamentals could win the public confidence to be the champion. The writer guesses no candidate has the courage, bravery and sincerity to implement the 13 fundamentals on behalf of the country. Lastly, any candidate, by focusing on accomplishments, demonstrating skills, genuineness and proving by actions, not by arguments could command respect in the race.

"THE SPOON WILL NEVER SENSE THE TASTE OF THE MEAL, THUS THE IGNORANT ONE WILL NEVER ABSORB FACTS EVEN IF HE ASSOCIATES THE INTELLECTUAL ONES". (Lord Buddha)

(The writer is a battle-hardened Infantry officer who served the Sri Lanka Army for over 36 years dedicating 20 years in the battlefield. He was the former Security Forces Commander of the Wanni Region and Eastern province in addition to being the Competent Authority to resettle 300,000 displaced people in the North. Having secured a PhD in economics, Presently he is working as an international researcher and international writer. He has authored more than 100 research articles and 16 scientific books. He is an advanced researcher in the University of Science and Technology in Taiwan. He is also an entrepreneur and philanthropist)

# கண்ணே கலைமானே

---







நிலவைக் காணும்போதெல்லாம் நெஞ்சில்
அவள் நினைவு வரும், வண்ண மலர்களை
நுகரும்போதெல்லாம் அவள் நேசம்
சுவாசத்தில் ஊர்வலம் போகும்

குயில் பாடும்போதெல்லாம் என்னைப்
பாடி அழைத்த தேவராகம்- அஞ்சுகங்கள்
கொஞ்சி மகிழும்போதெல்லாம்-ராதையைக்
கொஞ்சி  மகிழ்ந்த நெஞ்சிலே தாபம்

பார்கத் திகட்டாத பேரழகு- வசந்தம்
பூத்த பெண் அழகு, கண்களோ கயல்கள்,
காமன் கணைகளாய்த் தேனிதழ்கள
வண்ண முக்தில் காதலின் ஓயாத அலைகள்

கண்ணுக்குள் நுழைந்து, இதயத்தில் நிறைந்து
சுவாசத்தில் மணந்து, மொழியில் கவிதையானவள்,
பகலில் மலராகி, இரவில் நிலவாகி என்னை
ஆட்கொண்ட கோதை, என்தன் காதல் ராதை

பண்ணாகி இதயம் இசைக்க,-பரிமளமாகி
சுவாசத்தில் மணக்க, திருமணமான நறுமணம்
காதல் பறவைகளாய் வானிலே ஊர்வலம்
நாளும் வாழ்வோ காதலர் தினம்

அஞ்சுகமாய்க் கொஞ்சி, அழகு மயிலாய்
நெஞ்சில் ஆடி, கானக்குயிலாய்ப் பாடிய
என்தன் சோடிக்குயில், தன் நெஞ்சை
சூடிக்கொடுத்து, என்னைச் சூடிய கோதை

நான் படிக்க இறை தந்த காதல் கீதை
ஸ்ரீராமன் என்னை காதலால் சிறையெடுத்த சீதை
சூடிக்கொடுத்த ஆண்டாளாய்க் கோதை
மீட்டி மகிழ தேவதையோ கண்ணின் ராதை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-5-8-2024*

# காதல் நிலவு

---





நெஞ்சுக்குள் நேசத்தை பூமழையாய் அள்ளிச் சொரிந்தவள்
நினைவுக்குள் தேன் நிலாவாய் உலாவி-பகலிலும்
வண்ணக்கனவுகள் தந்தவள் எண்ணிக் களிக்க இதயம்
துடிக்க காதல் சொன்னவள், தேனிலும் இனியவள்

விண்ணோடும், முகிலோடும் விளையாடும்
வெண்ணிலவு, என்னோடு விளையாட என்
குடிலுக்கு வந்த பெண் நிலவு, பண்ணோடு
கலந்த இசையாய் என்னோடு கலந்த பாச உறவு

ஆலயத்தில் கண்ட அழகு-என் நெஞ்சில் ஆயிரம்
தாமரை பூத்திட காதலாகிப் பூத்த நிலவு-வண்ணமும்
வாசமுமாய் என்தன் காதல் உலகு-தாயாகக் கண்ட கனவு
நோயால் பொய்த்திட, என்னை சேயாய் கொஞ்சிய தேன்நிலவு

வாழ்ந்த காலம் வசந்தமாக, என் தேன் நிலவுக்கு
வந்த புற்றுநோய், என்னைக் கொல்ல
தேய்பிறையாய் தேய்ந்து, அமாவாசை இருளுக்குள்
மறைய, இருண்ட என் காதல் உலகு



காதலும் கனவானது, விழித்தெழ
பெருமான் புத்தர் காட்டிய வழி ஒளியானது
விழிப்புணர்வே நம் சொந்த இயல்பு
துக்கமே வாழ்வு, ஆனந்தமோ பகல் கனவு

மூப்பு, பிணி, சாக்காடு மாறாதது
மூன்றையும் வென்றவர் ஞானி புத்தர் ஒருவரே
உண்மையை அறிந்தால் பற்று விலகும்
ஞான புத்தரின் பாதையில் அமைதி கிட்டும்

அட்டாங்க மார்க்கமும், பஞ்சசீலமும்,
தியானமும், விழிப்புணர்வும் துணையாக
கருணையின் வழியில் வாழ்வு-ஆசை அழிந்த
மனதில் மாறாத அமைதியோ நல்வரவு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-31-07-2024*

# நளாயினி

அந்திக் கதிரவன் அழகு வானில் வண்ண ஓவியங்கள்
ஆயிரம் வரைந்திட, வண்ணப் புள்ளினங்கள்
சிந்து பாடிக் கூடு திரும்பிட, கழுத்து மணி ஒலிக்க
பந்தி பந்தியாய் வீடு திரும்பிடும் பசு நிரைகள்

கன்னி மாடத்தில் நின்று அந்தி சாயும்
பொழுதை கண்டு களித்த மங்கை-அதிகாலை
பூத்த செம்பங்கயமாய் பருவம் பூரிக்க, சாயதாத
பொழுதாய், வாடாத மலராயக் கன்னி அழகு




முந்திப் பூத்த வண்ண மலர் நளாயினி, பூவிழி குவளை,
எழில்முகம் பங்கயம், ஏந்திழையாள் கார்குழல் தோகை,
கனிவாய் கொவ்வை, பூந்தளிர் மேனி, பிறைநுதலில் நீறு,
பெருமான் சிவனை பூஜிக்கும் வாழ்வோ தவமான பேறு

அன்னை தந்தை காதலாகி உற்ற துயரம் நெஞ்சில் நிலைக்க,
அன்னை சீதை வனமேகிப் பட்ட துயர் முள்ளாய் வருத்த
திருமணத்தை வேண்டாத மணமாய் எண்ணி, கன்னி மாடத்தில்
சிவனை வழிபட்டு தபசியாய் வாழும் வாச மல்லிகை

தந்தை காட்டிய மன்னவர் ஓவியங்கள் ஒன்றேனும் கன்னி
மனதைக் கவரவில்லை, தொடவில்லை, வேண்டாம்
திருமணம் என ஒதுங்கி, காலமெல்லாம் கன்னியாய் வாழ,
கன்னி மாடத்தில் சிவனை பூஜிக்கும் நங்கை வாழ்வோ புனிதம்



கன்னியின் கரத்தை முனி மௌத்த கல்யரிஷி வேண்ட
கன்னி மனதை வென்று வாருங்கள், கன்னிகா தானம்
செய்து, உங்களுக்கே புதல்வியைத் தருகிறேன்
தந்தை நளன் கொடுத்த வாக்கு மாறாத திருவாக்கு

கன்னியைக் காணச் சென்ற முனி-தன் அவலட்சண உருவை
காமினி மயங்கும் மன்மதனாய் மாற்றிட, நடையிலே மிடுக்கு,
மொழியிலே அடுக்கு, மனதிலே ஆண்மையின் செருக்கு,
அங்க இலட்சணம் மங்கையைக் கவரக் காதலான பெண்மை

பூ வனத்தில் நடந்த சந்திப்போ, பூவை மனதில் காதல் நந்தவனமாக,
கட்டழகன் நடை, உடை, பாவனையில் மயங்கி நெஞ்சைப் பறிகொடுத்த
அஞ்சுகம், அறுசுவை தாண்டிய காதற் காமம் சுகிர்க நீரே
சிவன் தந்த பெருவரம் எனப் போற்றி மங்கை முடித்த தவம்

மயிலோ இவள், மடப் பிடியோ இவள்,
மானோ இவள், மழலைக் குயிலோ இவள்
ஒளிரும் பொன்மேனி கொடியோ, ஒப்புதல்
தருவாளோ என்னை மணக்க கன்னி

விழி உண்டது கள்ளோ தேனோ, செவி கேட்டது
குயிலின் கானமோ?, வீணையின் மோகனமோ?,
நந்தவனத்தில் நடப்பது அன்னமோ? தோகையோ
முனி என் மனதை ஆட்கொண்டது அழகோ? ரதியோ

ஒப்புதல் அளித்து, கணையாழியை தந்தைக்குத்
அடையாளமாய் அனுப்பிட, வியந்த மன்னவன், பருவக்
குமரி, வயதான முனியைத் தேர்ந்ததென்ன? விதி வலிது
மனதைத் தேற்றி மணவிழாவைச் சிறப்பித்த பொழுது

பூமனம் இதழ் விரித்து காதல் இசைபாட, பூவை மனதில்
மையல் தேனாய் சுவை கூட்ட-மணம் முடித்து மணாளணோடு
சுகம் காண, முதலிரவன்று, மனம் இனிக்க மதுகாரிக்குத்
தன்னை விருந்தாய் அளிக்க இதழ் அவிழ்த்த கோதை

நாணிப் பெண்மை ஆனிப்பொன்னாய்ச் சிவக்க
பொன்மேனி தழுவி, பெண் இன்பம் அறிந்து
தீர்க்க சுமங்கலி பவ என வாழ்த்தும் முனி ஆசிர் கிட்ட
தன்னைப் பூவாய் அள்ளிக் கொடுக்க தாள் பணிந்த மங்கை,

முனியின் மெய் வடிவம் கண்டு, மங்கை மனம் வாடிய சருகானது
ஆண் மனது அறிந்தும், காமன் கணைபட்டு, காதல் வசப்பட்டு,
கண்டது மாயப் பொன்மான் என அறியாமல் ஏமாந்த மனது
சிவன் தந்த வரத்தை சிவப்பிரசாதமாய் ஏற்ற இராப்பொழுது

மதுமலர் சூடிய, மங்கை மேனியில் பரிமளம் மணக்க
அஞ்சன விழிகளில் ஆயிரம் கனவுகள் பிறக்க- -தேன்நிலவை
முதலிரவில் சுகிர்த்து பசியாறப் பாலோடு வந்த பெண்மை
கண்ட கனவு பொய்யாகப் திரைந்த பாலாய் அம்மை

தூங்கியதுபோல் நடித்த முனிவனோ-கண்ட
மன்மதனல்ல, மூப்பு முந்தி வந்திட,
தேகம் வாடி வனப்பிழந்திட, தேய்பிறை நிலவு,
தேற்றிய மனதில் கண்ட காதலும் மாயக் கனவு

***விழி காண்பதும் பொய், செவி கேட்பதும் பொய்***
***இதயம் காதலின் மொழி, இவன்தான் என்தன் பதி***

பாடி அழைத்த குயில் என்தன் சோடிக்குயிலாய் இல்லை
நந்தவனத்தில் கண்ட கட்டழகன், உருவம் கண்டு
பருவம் மோகித்த சந்திரமோகன் இவனாய் இல்லை
பதிக்கு பணிவிடை புரிதலே வதியின் தர்மம் பணிந்த மங்கை



விடியலில் பாலும் புளித்திட-விடியலின்றி
கன்னி கழியாத மங்கையாய் நளாயினி மனம்
கசந்திட, காத்திருப்பேன் காலம் மாறும்-ஒரு நாள்
சிவனுக்காய் செய்த தவம் வரமாய் நிறைவேறும்

யாதுமொரு மொழி கூறாமல், கணவனே கண்கண்ட
தெய்வம் எனப் போற்றிய மங்கை, கல்மனமோ
கன்னியைச் சோதிக்க, மெய்யெல்லாம் புண்ணாக,
ரோகியாய் மாறிட, முந்தனையால் விசிறிய பெண்மை

தென்றலாய் தவழ்ந்த காற்று முனியைத் தீயாய்த் தீண்ட
பேரழகி, இளவரசி, உண்மையில் என்னை நேசிப்பாளோ
ஐயம் மனதை கறையானாய் அரிக்க, வேகுதடி
மேனி காமத்தால், உன்னிடம் தணிக்க மனம் நோகுதடி



நடனக்காரியிடம் என்னைக் கூட்டிச் செல் பணிந்திட
கூடையில் வைத்து தலையில் சுமந்த பதிவிரதை
வேசிக்கு பொன்னாய் தங்கத் தாலியை ஈந்து
வாசலிலே தவமிருந்த பெண்மை



இளமை ஊஞ்சலாட உருமாறி, கணிகையிடம்
காமசூத்திரம் ஓதிய காமக் கள்வன், முதியோனாய்த் தோற்றம்
முதலிரவு காண்போனாய் சல்லாபம், அஞ்சிய கணிகை
அடைக்கலம் என நளாயினியை சரணடைந்த பெண்மை

காமம் சுகிர்த்த முனிவன் என்னை
கடுகி வீடு கொண்டு செல் கோபமாய்ப் பணித்திட
கூடையில் வைத்து, ஆடையால் மறைத்து
அன்ன நடை பின்னிட ஓடி நடந்த மங்கை

கணவனைச் சுமந்து கடுகி வீடு நோக்கி நடைபோட
கழுவேற்றி மாண்டவிய முனியின் கால்களை கூடை தடுக்கி
வலி பெருக, விடியமுன் நீ விதவை சபித்த முனி
விடியாத கதிரே, உதயத்தை தடுத்த கன்னி

***பெண்மையோ பந்தயம், ஆடும் பகடையோ***
***சூதாடிகளுக்குச் சம்போக சாஸ்திரம்?***

விடியலின்றி வண்ணோரும், மண்ணோரும் வாட, இந்திரன்
கதிரவனிடம் கதையறிந்து, நளாயினியை வேண்ட
உதித்த கதிரவன், உலகறிந்த பதிவிரதை நளாயினி,
உத்தமி, போற்றிய கணவன் மௌத்தகல்யரிஷி



சதியால் தன் உருமாற்றி, அழகிய வதியை
தன் உடைமையாக்கிய முனியோ பதி,
பதிவிரதையாய் தன்னை மாற்றி
ரோகிக்கும் பணி புரிந்த வதியோ உத்தமி



உன்னைச் சோதித்தறிந்தேன் கன்னியே நீ
உண்மையில் பதிவிரதை, வேண்டும் வரம் கேள் தருகிறேன்
முனி பகர, ஐந்துருவாயிருந்து அருஞ்சுகம் தர
எப்பிறப்பிலும் என்றும் என் பதியாய் நீர் வேண்டும்

சிலநாள் கூடியிருந்து இன்பம் சுகிர்த்து பின் தவம் புரிய
வனம் நாடி முனி செல்லப் பின் தொடர்ந்த மங்கை
சினந்து சிற்றின்பம் நாடிய பெண்ணை மனிதயோனியில் பட்டு
மறுபிறப்பில் ஐவரை மணந்து உன் குறை தீர்ப்பாய் சபித்த முனி

பாஞ்சாலியாய் பிறந்து, பஞ்ச பாண்டவரை மணந்து,
சொல்லொண்ணாத் துயர் உற்ற மங்கை, புராணக்
கதையெல்லாம் பெண்மையை அடிமை கொண்ட சோதனை,
சம்போகப் பொருளாய் சித்தரித்த வேதனை

தலையில் சுமந்தாலும், காதலை நெஞ்சில் சுமந்த
பெண்மையோ மேன்மை, பேரழகி கூட இருந்தும்
தாழ்வு மனப்பான்மை, நினவிலே காமச் சகதி
மனதிலே மாறாத சந்தேகப் புழுதி

காமனை வெல்ல முனிகளுக்கும், முத்தேவர்களுக்கும்
சக்தியில்லை,-ஐயப்பன் கதையோ ஹரிஹரனுக்கு இழுக்கு
சிவனழகில் மயங்கிய ரிஷி பத்தினிகளுக்கு கற்பும் அழுக்கு
காமப்புரணங்களால் நாறும் வைதிகமும் மதமோ விளங்கு?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-8-2024

# விண் தாண்டி வந்த வெண்ணிலவு

ஏனடி என் நெஞ்சுக்குள் இத்தனை சோகம், உன்னைப்
பிரிந்தபின் சோலையான நெஞ்சோ பாலையான துயரம்
கண்ணாடியில் நிதம் பார்த்தும், நெஞ்சில் நிலைக்காத என்னுருவம்,
வண்ணம் கலையாத ஓவியமாய் என்நெஞ்சுக்குள் உன் ரூபம்



பூ விழிகளால் என்னைச் சிறையெடுத்து-செந்தேன்
மொழிகளால் கவிதை படைத்து, வானவெளியில்
காதல் சிறகை இதயம் விரித்து பறக்க, ஏனடி
காதலை, கண்களால் என் நெஞ்சில் விதைத்தாய்?

உன் குவளை விழிகளில் காதல் பாசுரம், கண்பட்டு காதல்
வசப்பட்ட என் நெஞ்சிலே காதற் சுரம், தேவதையே
உனக்காய் நான் பாடும் காதல் தேவாரம், சூடிக்கொடுத்த
ஆண்டாளே உனக்காய் என் காதல் கீர்த்தனம்



உன்னை நினைக்கையில் அஞ்சுகமே என் நெஞ்சுக்குள் பூபாளம்,
நீ தந்த கனவுகளால் அருஞ்சுகமே என் சுவாசத்தில் பூ மணம்,
உன்னை அணைக்கையில் என் இதயமோ தேவலோகம்,
நீயில்லாத உலகோ எனக்கு இன்று எரிநரகம்

ஒரு மொழி சொல்லாமல் கண் மறைந்தாய்
ஊன் மறந்து. உறக்கம் துறந்து
உன் அலைபேசி அழைப்பிற்காய் என் தவம்
உன் அழைப்போ கிட்டாத வரம்

என் அழுகையில் மொழியில்லாத சோகம்
என் இதயத்தில் தந்தி அறுந்த வீணையின் பாவம்
மலரும் சுடுகுதடி, மஞ்சமும் வேகுதடி, மீட்டும்
வீணையிலும் சோக ராகமடி, இதயம் எரியுதடி



கண் பார்த்ததும் பாவம், நெஞ்சம் காதலை
எழுதியதோ சாபம், தவமின்றி வரமாய்ப் பெற்ற காதல்
என்னை மெல்லக் கொல்ல, உன்தன் தேவதாஸாய்
நான் மடிய ஏனடி பார்வதி என்னை மறந்தாய்?

விண்தாண்டி வந்து என்னோடு உறவாடிய
வெண்ணிலவு, கண்பட்டதோவெனக் கண் மறைந்து
அமாவாசை இருளுக்குள் காணாமற்போன
என் காதல் தேன் நிலவு, எங்கே?



வாடாத மலராய் என் நெஞ்சில் நிலைத்த
உன் பூவிழிகள், வற்றாத குளத்துப்
பொற்தாமரையாய் உன் முகம், தெவிட்டாத
தெள்ளமுதான உன் காதல் மொழிகள்

கண்களால் காதல் சொல்லி,
செவ்விதழ் புன்னகையால் நீ தந்த காதற் சுரம்,
கண் பார்த்து நெஞ்செழுதிய காவிமாய்
என் நெஞ்சில் உன் வண்ண ஓவியம்



கலைந்த கார்குழலும் கவிதை சொல்ல
சிவந்த இதழ்கள், போதையைச் சொல்ல
நிலைத்த பார்வையில் நெஞ்சம் துள்ள
காதலால் என்னை கட்டிப்போட்ட கட்டழகு

விழி மறைத்த வில்லைகுள்
ஒளிந்தவை விழிகளல்ல, வேல்கள்
வீழ்ந்தவை மான்களல்ல
ஆண் மனங்கள்



கண்பட்டு விழுந்து காதலான மனது,
பெண் மனம் பட்டு, என்தன் வண்ணச் சிட்டு,
காதல் மொட்டு, நான் பாடிய மெட்டு,
கலைந்த ராகமானதென்ன? மனம் வேகுவதென்ன?

செவ்விதழ்களில் செந்தேன் பருக நெஞ்சிலே காதல் தாகம்?
விரித்த கார்குழலில் மல்லிகை சூடி, பிறை நுதலில்
குங்குமம் வைத்து, மாலை சூடி, கைத்தலம் பற்றி
இல்லறம் ஏற்க, இருவர் மனதிலும் இனிய விரகதாபம்,

என்தன் காதல் சங்கமம் வற்றிக் காய்ந்ததோ?
மனம் பாலையானதோ? மங்கலமும் குலைந்ததோ?
மனம் கண்ட இன்பக் கனவும் கலைந்ததோ
மாங்கலயம் தந்து நானே-ஓதாத மந்திரமானதோ?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-6-8-2024*

# யுத்த பூமி





வரலாறு எங்கும் இரத்தக் கறை-வல்லமையை
நிருபித்த இறைவன் கரங்களிலும் குருதிக் கறை
யுத்தம் புரியாத இனமில்லை-காயீன்
ஆபேலைக் கொல்லும் நிலை மாறவில்லை

மதவாதம், இனவாதம் நிலைக்க இழிந்த
தத்துவங்கள், மனித நேயத்தைச் சிதைக்க
வல்லரசுக் கனவுகள், மதம் பரப்பிட நாடு பிடித்த
கொள்ளையர்கள் காலனித்துவங்கள்

அன்றும் உலகில் அமைதியில்லை
இன்றும் உலகில் அமைதி கானல் நீரான நிலை
என்றும் அமைதி உலகில் இருக்கப்போவதில்லை
அழிவை இறைவனால் கூட தடுக்க முடியவில்லை





அமைதி கண்ட பெருமானோ போதியின் அடியில்
தன் அமைதியை அருங்கொடையாய் நல்கிய
மனுமகனோ கழுமரத்தில், அமைதியைப் பழிக்கும்
மதவாதம், அரசியல்வாதமோ அரியணையில்

சங்கொலியும், மணியோசையும் சாந்தி தரவில்லை,
நீறு, சிலுவை, நாமம், தொப்பி ஆயுதம் ஏந்திய நிலையில்,
இனவாதம், மதவாதம் நிலைக்க பேரழிவு ஆயுதங்கள்
அன்பு, உண்மை மனிதம் அறியாத் தவங்கள்

ஏட்டில் எழுத்தாய் வேதங்கள், சடங்கு.
பலி, தீர்த்த யாத்திரையாய் மதங்கள்
செல்வமே ஆளும் வர்கம், செல்லாக் காசான
ஏழைகளோ எரிநரகில் வாடும் துக்கம்





இரத்தங்களால் எழுதும் வெற்றிகள் என்றுமே
நிலைப்பதில்லை, தோற்றவன் மனதின் துயரங்கள்
மறைவதில்லை, அவன் சந்ததி பழிவாங்க மறப்பதில்லை
அன்பில்லா நெஞ்சங்களில் அமைதிக்கு இடமில்லை

அமைதிப் புறாவும், ஒலிவ மரமும் குண்டுகளால்
சாய்ந்த நிலை, புதைகுழிகளின் தலைமாடுகளிலும்
ஆலயக்கோபுரங்களின் உச்சியிலும் சிலுவைகள்



அமைதியை அச்சுறுத்தும் ஆரவாரங்களாய்
பேரழிவு ஆயுதங்களோடும், இராணுவ
அணிவகுப்போடும் சுதந்திர தின விழாக்கள்
அடிமைகள் நெஞ்சில் ஆறாத காயங்கள்



யுத்தத்தால் மனிதம் சாகும், அதர்மம் ஓங்கும்
அன்பே தெய்வம், உண்மையே பாதை
ஒன்றே குலம் ஒருவனே தேவன், நாம் சகோதரர்கள்

மனிதம் வாழ ஆணவம் அழிய பெருமான்
புத்தரும், இயேசுவும் மனித மனங்களில்
மீண்டும் பிறக்கவேண்டும்



உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை
பூவுலகில் நல்மனத்தவருக்கு அமைதி
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு



எங்கள் கண்களில் மலர்ந்த வண்ணக் கனவுகள்
கலையுமுன் கண்ணீர் படையெடுத்தது, எங்கள் இதயத்து
விடியல் மறையுமுன் இமயச்சோகம் உள்ளத்தை
நொருக்கிட, யுத்த மேகங்கள் வானைச் சூழ்ந்தன



ஒப்பாரியும், அழுகையும் ஒலிக்காத வீடில்லை
இப்பாரில் அமைதி என்பது வெறுங்கனவு
ஆயுதமோகத்தால் மாயும் உலகில், கடவுளும்
கற்பனை, அன்பும், உண்மையும் ஒப்பனை

அபினியும், போதை வஸ்துமாய் மதங்கள்
கற்பனையும், புராணங்களுமாய் வேதங்கள்
கண்ணுக்கு கண், பல்லிற்குப் பல் திருச்சட்டங்கள்
அன்பே இறைவன் மனிதன் அறியாத அவலங்கள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-6-8-2024*